# 20
# பேய்க்கவிதை

'ரகஸ்யமாய் கனவு போல் சிரித்தது காற்று!' என்று படித்தான் புண்டரீகன்! இந்தப் புராதனப்பெயர் அவனுக்கு ரொம்பப் பிடித்தது. போன வருடம்தான் பி.எஸ்ஸி பாஸ் செய்திருந்தான். ரகஸ்யமாய் கனவு போல் அவனுக்குக் காற்று சிரிக்காது! முதலில் காற்று என்பதே போதுமான அளவில் நிரூபணமாகவில்லை. இரவு புண்டரீகன் ஓர் சையன்ஸ் க்ர்ஜீவெட் என்பது அதற்கு தெரியப் போகிற வழியில்லை. காற்று கனவாகி ரகஸ்யமாய் சிரிப்பது என்பது சுத்த கயவாளித்தனம் என்றே தோன்றியது.

புண்டரீகன் ஐயங்கார் பையன் ஒஹ்! ஜாதிதான் பேசக்கூடாதே-இங்கே அது ஏது?

அவனுக்குக் கவிதை பிடிக்காது. தெரியாது புரியாது ஓ! அப்படி ஒன்று இருக்கிற மடத்தனம் வராது. உலகை மாற்ற வேண்டும் என்கிற தீவிரக் கனவு எப்போதும் புண்டரீகனை அலைத்தது. ரகஸ்யமாய் காற்று சிரிக்கிற விவகாரங்கள் அவன் தங்கையினது!

அவன் தங்கையானாலும் இப்போது அவள் உடல் தெரிந்தது! அவள் பெயர் பெருந்திரு! அப்பாவுக்கு புராதனம் புராணம் பலிதம் ஜோஸ்யம் இவைகளில் அபார நம்பிக்கை. புண்டரீகன் என்று யாராவது இந்தக் காலத்திலே பேர் வைத்திருப்பார்களா? பெருந்திரு. பெண்டாட்டியைக்கூட தாயாரே என்றழைப்பார்! பயங்கரமாய் இருக்கும். அப்பாவின் பெயர் மட்டும் ராமசாமி சாதாரணம்தான்!

பெருந்திரு ரொம்ப அழகாயிருப்பாள். ஐயங்கார் கட்டு மடிப்புடவைக்கே தனி அழகும் இறுக்கமும் வளைந்து காட்டும் பேரழகு உண்டு. பெருந்திரு எப்போதும் சிரித்துக் கொண்டேயிருப்பாள். அம்மா திட்டிக் கொண்டேயிருப்பாள் ''என்னடீது!? எப்பப் பார்த்தாலும் இளிச்சுப்புளிச்சிண்டு! சீ! பொண் இப்படிச் சிரிச்சிண்டேயிருந்தா சிரிப்பாய்ச் சிரிச்சுப் போகும்!''

புண்டரீகன் இப்போது தன் பெயர் ரொம்ப நன்றாய் இருப்பதாய் உணர்ந்தான். பெருந்திருவை இப்போதெல்லாம் பார்க்க முடிவதில்லை. இப்போது அவனுக்கும், அவளுக்கும் 'உடல்' இல்லை!

பகல், இருட்டு இல்லை. வெளிச்சத்துக்கு அர்த்தமேயில்லை. இருட்டும் ஒளியாய் இருக்கிறது. வெளிச்சம் அலுமினியம் பூசிக் கொண்டதுபோல் இருட்டு வெளிச்சத்துடன் குழைந்து சாம்பல் வெண்மை கலந்து கொண்டது. புண்டரீகன் பெருந்திருவைத் தேடுவதில்லை இப்போதெல்லாம். எங்கு பார்த்தாலும் புண்டரீகனைப் போன்ற சவங்கள்! உடலில்லாத சவங்கள் அல்லது

ஜடமில்லாத உயிர்கள் வடிவமற்ற நுண்ணுணர்வின் வடிவங்கள். வந்ததிலிருந்து, புண்டரீகன் ஆய்ந்து கொண்டேதான் இருக்கிறான். ஐம்பது வருடங்கள் இருக்குமா?- காலத்தைத் தாங்கிய அறிவு இன்னும் அகன்றது. பூமியில் இருந்தபோது காலம் புரிந்தது. இடம், திதி, நட்சத்திரங்கள், ஐயங்கார், திருகண்ணமுது, தாயார் சந்நிதி, தங்கை பெருந்திருவின் முலை! ஆ! இப்போதும் எப்படி செக்ஸ் இருக்க முடியும்!? எல்லாமே காலத்தை நொறுக்கியது! புண்டரீகன் இன்னும் தேடுகிறான் தேடுகிறான் அல்ல தேடுகிறது தேடும்! ஆ! அது!!

புண்டரீகன் தன் ரசாயன உடலை உடைத்துத் தரையில் விழுந்தபோது அதே உடலின் ரத்தம் சிந்தியது போக தண்ணீராகவும் சீரமாகவும் பிரிந்தபோதும் உடம்பின் உட்புறத்திலருந்து வெள்ளி நூல் ஒன்று நீண்டு வெளியேறுவது புரிந்தது. பேரழகு படைத்ததன் உடல் வழுவுண்டு சுருண்டு நாறுவதும் போஸ்ட்மார்ட்டம் செய்யப்படுவதும் ஆச்சர்யமாய் இருந்தது. கவிதை இன்னும் இத்தனைக்கும் பிறகும் புரிவதாய் இல்லை. பெருந்திரு வந்தாள். அவளது முகம் மட்டும் வெள்ளிச் சுருணையாய் ஒளியாய் வந்தது. தன் முகத்தைப் பார்த்துக் கொள்ள விரும்பியது புண்டரீகனின் முகம். எதிரே பந்தாய் உருண்டு கண்டது. பெருந்திரு மகிழ்வே வடிவாய் ‘அண்ணா!’ என்று புளகித்தாள். அவளுக்கே பூமியில் வாழ்ந்த நினைவே இல்லை மாதிரி தோன்றியது. அதைப் பற்றி அவள் பேசவேயில்லை. அவளது அற்புதமான உடலை நினைவு கொண்டான் புண்டரீகன். அது கண்ணெதிரே தோன்றவில்லை. ‘ஜெர் செக்ஸ்’ தோன்றினார். நீண்ட உருவம்! முழு உருவம் ஒளிவடிவம். நீல நுண் ஒளி பாஸ்பரஸ் எரிவது போன்ற ஒளி வட்டம். அவன் உடலைத் தடவினார். சூக்கும உடல் ஒன்று இருப்பது அப்போது தென்பட்டது புண்டரீகத்துக்கு. புண்டரீகம் சிரித்தது. ஜெர்செக்ஸ் பெரிய்ய மன்னர்! பாரசீகத்தில் படை நடத்தி கிரேக்கப் போர் வீரரைத் துரத்தியடித்த பெரும் தளபதி. இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னே வாழ்ந்தவை!

புண்டரீகம் அவரைக் கேட்டது. ஜெர்ஸெக்ஸீம் சிரித்தது. கேள்வியிதுதான் எனக்கு இன்னும் பெருந்தேவி வேணும் என்றும் உள்ளே நுழைய வேண்டும் என்றும்; நுழைக்க வேண்டும் என்றும் உளைக்கிறதே துளைத்து! என்ன இது? செத்த பின்னும் கூடவா உடம்பு? உடம்பு இழந்தும் கூடவா உடம்புக்கு தன் உள்ளிந்தரியம் ஊற்ற உழைச்சல்? ‘பிழை’ தப்போ? உளைச்சல்!!

பளிச்சென்று பெருந்தேவி வந்தாள் உடனே! அண்ணா பாரேன்-கண்ணெதிரே பெருந்திரு பெருந்தேவியாய் தங்க நிறத்தில் அவள் உடல் நிர்வாணமாய் விளங்கியது! அழகுதான் ஆனால் தழுவ வேண்டும் மேலே உருள வேண்டும் என்று தோன்றவில்லை. மனசு என்ற ஒன்றும் காணோம். யோசிக்கிற அறிவும் இல்லை. ஏதோ பூர்வம் மட்டும் அங்கங்கே திட்டு திட்டாய் புண்டரீகமாய் நிற்க ஜெர்செக்ஸும் சிரித்தது.

போதுமா? என்றது மீண்டும். ஆம் உடம்பு! தான் விரும்பிய தங்கை! யாருக்கும் தரத்தயாராய் இல்லாத தன் தங்கை! சின்னஞ்சிறு வயதில்

அம்மாவைத்தான் அப்படி உயிராய் உருக்கியது புண்டரீகம். தங்கைப் பாப்பா பிறந்த போது ஆச்சர்யம் புண்டரீகனுக்கு. தங்க பொம்மை குங்குமம் பூசிக் கொண்ட அபூர்வமான குழந்தை. கை கால்களை அசைத்த போதே கலந்துவிட்டது. ஆசை! ஆசையா அது?!

அம்மாவின் மேலிருந்த வெறி பெருந்திருவின் மீது சரிந்து கொட்டியது. புண்டரீகன் அவளைக் கீழே இறங்க விடமாட்டான். எப்போதும் தங்கையின் கதகதப்பு வேண்டும். ''கீழ விடுடா எப்போப் பாத்தாலும் என்னது தூக்கித் தூக்கி வெச்சிண்டு!'' அம்மா கத்துவாள். விடமாட்டான். பத்துவயதில் கூட பெருந்திரு அவன் இடுப்பிலேயேதான் உட்கார்ந்திருப்பாள். அம்மா கத்திக் கொண்டேயிருப்பாள். அப்பா அடிப்பார். பெருந்திரு அழுவாள். அவன் தான் வேணும்! அவன்தான் குளிப்பாட்டி விட வேண்டும். சோறு ஊட்ட வேண்டும். ''பன்னிரண்டு வயசாச்சு இன்னும் ஒரு சுலோகம் சொல்லத் தெரீலை! ஒரு கேரதா ஸ்துதி சொல்ல வரலை! அள்ளித் திங்கத் தெரியிலேயோடி நோக்கு சனியனே!'' அம்மாவின் சரணம் இது. புண்டரீகன்தான் ஊட்டிவிட வேண்டும் ''இன்னும் இரண்டு வருஷத்திலே ஆமடையானோட ஆத்துக்குப் போணும்... இப்படியே எழஞ்சுண்டு இருந்தா குத்தி குழீயில் அள்ளி வெக்ய வேண்டியதுதான். போ!'' என்று வைவாள் அம்மா! கண்ணையும் துடைச்சுக்குவாள். பெருந்திரு பொறக்கும்போதே அம்மாவை சாப்பிட்டவா என்றார்கள் டாக்டர்கள். சிஸேரியன் ஆபரேஷன் பண்ணி வெளியே எடுத்தார்கள் அவளை. குழந்தை ரொம்பச் சின்னது. ஒரு கைக்குள்ளாகவே அடங்கி போயிடும். அத்தனைக்குச் சின்னது. பதிமூனு வயசு ஆனப்போதான் பெருந்திரு வேற பெண்ணாகிப் போனாள். புண்டரீகனுக்கு அது புரியலை! ம்ம் சொல்லிண்டேயிருந்தாள்! ''ரொம்பப் தாங்காது இந்த வாரமே! அம்மா சொல்லிண்டேயிருந்தாள்!''- ஆனால் அடுத்த வருஷம்தான் பெருந்திரு பெருசாகிப் பூத்தாள். அது இன்னது என்று புண்டரீகனுக்கும் புரியவில்லை. ஏதோ ரத்த சம்பந்தப்பட்டது என்று தோன்றியது. அன்றிலிருந்தே - பெருசாவதற்கு முன் ஒரு வருஷத்துக்கு முன்னிருந்தே புஷ்பிப்பதற்கு முன்பே மகரந்தம் வீச ஆரம்பித்தது மட்டும் புண்டரீகனுக்குப் புரிந்தது. விளையாடிக் கொண்டிருக்கும்போதே பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பும் போதே ஊஞ்சலில் பெருந்திருவோட ஆடிக் கீழே விழுந்து தவறிப் போய் எப்போதாவது உடம்போடு உடம்பு உரசிவிடும்போது பெருந்திருவின் உடம்பிலிருந்து படர்ந்து வரும் ஒருவித மணம் ஆச்சர்யம்! அது அதற்கென்றே உண்டான நாற்றம், ஆரோக்கியமான வியர்வை மீண்டும் மணமும் அதனுடன் கலந்து வீசியபடி அத்துடன் அவள் உபயோகிக்கிற பட்டணத்து மஞ்சள், கஸ்தூரி அப்புறம் ஸ்நானப்பொடி மணங்கள். அதற்குமேலே அவள் உபயோகிக்கிற வினோலியா யு.எஸ்.ஏ. சோப். ஃபாரின் வாசனை. இத்தனையும் அந்த உடலின் நாற்றம் தேன் மணம் போல் தனி மணம் ஊட்டிய அதன் தனி மணம். தனிச்சுவை. இதன் ஆச்சரிய அர்த்தம் புண்டரீகனுக்கும் அப்போது புரியவே இல்லை. ஆணையும் பெண்ணையும் தனித்தனியே பிரித்து விடுகிற நம்

சமூகத்தின் தனித்துவம் அப்போது புரியவேயில்லை. தனித்துவம் புரிய இன்னும் எத்தனையோ ஆண்டுகள் தேவைப்படும் என்பது ஆச்சரியமான உண்மையில்லாமல் வேறு என்ன? அவனைக் கிட்ட வர ஒட்டாமல் அடித்தாள். பெருந்திரு மடியில் படுக்க மறுத்தாள். சிரித்துப்பேசக் கூசினாள். அவனுடன் தனியே இருக்க வெறுத்தாள். இத்தனைக்கும் அவள் பெருசாகாத பெண்தான்!

பெருந்திரு அவனது ஸ்னேகிதை! தங்கை மட்டும் அல்ல. புண்டரீகன் ஏங்கினான். தொட்டுப் பழகிய கட்டிக் கனியான அவள் எட்டிப் போனது மட்டுமல்ல. அவள் பெண் என்றும். அவன் ஆண்தான் என்றும் கொடுமை காட்டினாள். துவைத்த துணிகளைக் கூட பிரித்து அடுக்கிய பெருந்திரு அவன் துணி வேறு விலக்கிக் காட்டிய அவள் அவன் தங்கைதானா? என்று பயம் உலுக்கியது அவனை. மணிக்கணக்கில் அவளோடு ஒட்டி உரசி உட்கார்ந்து மொட்டை மாடியில் கதைகள் பேசிய பழம் சம்பவங்கள் பொய்யாப் போயின. சாப்பிட அம்மா கூப்பாடு போட்டு கூப்பிட வேண்டியிருக்கும். புழக்கடை கேணிப் படிச் சுவற்றில் கேணியின் உட்புறம் தண்ணீருக்கு மேலேயுள்ள கடைசி மூன்றாம் படியில் இருவரும் உட்கார்ந்து அப்பாவையும், அம்மாவையும் பார்த்த, இரவு ரகஸியங்களைப் பரிமாறிக் கொண்ட காலம் இனி தனியாய் வரப்போவதில்லை. அம்மா தேடிக் கொண்டு வந்து கிணற்றின் சுற்றுச் சுவரில் எட்டிப் பார்த்துக் கத்துவாளே! ''எட்டீ! சனியனே! கேணிக்குள்ள என்னடீ பண்றேள்? அப்படியே விழுந்து தொலைங்கோ, சனியல்லாம் ஒழிஞ்சதுன்னு ஒரு நாள் அழுது தொலைச்சுப்புட்டு அப்புறம் நிம்மதியா இருப்போம். கடங்காரி! ஒன்னால ஒரு நிம்மதியும் இல்லெடீ! சீச்சீச்சீ!''

அவளது பதினாலாவது வயதில் பெருந்திரு எட்டி மட்டும் போகவில்லை. அவள் என்கிற ஜென்மமே அடியோடு வேறு என்பதைக் காட்டியபோது வெட்டுண்டான் புண்டரீகன். மைசூர் சந்தன சோப்பும் வினோலியாவும் போட்டுக் குளித்துக் கொண்டு நின்றாள் பெருந்திரு. பொளக்கடைப்பக்கம் போயிருந்தாள் அம்மா. குளிப்பதும் பெருந்திருவுடன்தான் புண்டரீகன் ஸ்நானம்! இப்போதெல்லாம் அவள் வருவதும் இல்லை. எண்ணெய் தேய்க்கக்கூட அவள் வருவதில்லை. அம்மாதான் வருகிறாள். வாழை மரங்களுக்கிடையில் அவள் கிணற்றடியில் குளிப்பது ஏதோ ஆயில் பெயிண்டிங் மாதிரி அற்புதமாய் இருந்தது. ஒளிந்து பார்க்க வேண்டியதாகிவிட்டது. நெஞ்சு கனத்தது. எத்தனை அழகு! மூடிக்கட்டித்தான் குளித்தாள் பெருந்திரு! பெருந்திருதான் அவள். கண்ணை இமைக்க முடியவில்லை. பார்த்தவை புதியதல்ல. இனந்தெரியாத ஏதோ ஒரு மூர்க்கம் உடல் முழுவதும் மனசு முழுவதுமாய்ப் படர்ந்து எரிந்தது. பூரணமாய் புரிந்து கொள்ளுமுன்னம் மூடிவிட்டது போல் அடுப்பு அடங்கியது. சேலையைக் களைந்த போதுதான் அவள் எத்தனை பெரிய பெண்ணாகி விட்டிருந்தாள் என்பது பருமனாகியது அவனுக்குள்!

''அடப்பாவி! கட்டால போறவளே! தங்கையெயாடா இப்படி ஒளிஞ்சு நின்னு பாத்துண்டிருப்பெ? ''

''அம்மா! என்ன? நானு! ஒளிஞ்சு நின்னு பாக்கல்லம்ம வந்து...''

பெருந்திரு திரும்பிப் பார்த்தாள். உடனே சுற்றி இறுகிக் கொண்டாள். கடுகடுத்த முகம் இன்னும் மூடிக்கொண்டது. அம்மா ஏதும் பேசு முன் வெளியேயிருந்து உள்ளே பாய்ந்துவிட்டான் புண்டரீகன்.

பதினாலு வயதில் அவள் சிறுமியல்ல என்பது புரிந்தபோதுதான் அவனுக்கு விஞ்ஞானம் ஞாபகம் வந்தது. அவன் புரிந்து கொண்டு படித்த எந்த விஞ்ஞான மனோத்தத்துவமும் இங்கே ஜீரணமாகாத சமூகம் என்று அவனை வெட்டிச் சாய்க்கக் காத்திருந்தது அந்த விஞ்ஞானிகளுக்குப் புரியுமா? உடம்பு என்பது பற்றி அவர்கள் எழுதி வைத்து மனசைப் பற்றியும் ஏராளமான புதிர்களையும் எழுதி வைத்திருந்தது அவனுக்கு சுமையாய்த்தான் இருந்தது.

அம்மாவை மீண்டும் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. வீட்டின் உள்ளே பல வேலிகள் குறுக்கும் நெடுக்குமாய் விழுந்து கொண்டிருந்தன. தனியே பெருந்திருவுடன் பேசக் கூட முடியவில்லை. முற்றிலும் ஒதுக்கினாள் அவனை. திண்ணையில் உட்கார்ந்திருப்பாள். அவன் வீட்டு குத்துச் செங்கல் ஏறியதும் எழுந்து உள்ளே போய் விடுவாள். ஊஞ்சலில் மோகினி போல் உந்திக் கொண்டிருப்பாள். அவன் வருவான் ஊஞ்சல் நின்று போகும் எழுந்து உள்ளே போய் விடுவாள். ஒன்றரை ரெண்டு வருடங்களாய் குறுக்கில் புகுந்து கொண்ட மௌனம் கூட இப்போது கிடைப்பதில்லை. இப்போது கிடைப்பது மௌனமல்ல. அம்மா ''தட்டிக் கொண்டிருப்பதோடு சரி என்னடீ பொண்ணே! அவங்கிட்ட பேசக்கூட மாட்டேங்கிறியாம்? என்ன ஆச்சு உங்களுக்குள்ளே?'' என்பாள், ''ஒண்ணும் இல்லம்மா!'' என்பாள் பெருந்திரு. வீட்டுக்குள் முளைத்த சுவர்கள் கூட புண்டரீகனைப் பயமுறுத்தவில்லை.

பூனை சீறுவது போல் பார்வையாலே அவனை மறுத்தலிக்கிற கேவலம்தான் தாங்க முடியவில்லை. கல்யாணங்களுக்குப் போகும்போது கேவிலில் சாமி கும்பிடும்போது உள் காமிரா உள்ளில் பெருந்திரு உடுத்திக் கொண்டிருக்கும்போது கைகள் இரண்டையும் ஆகாயத்தே உயர்த்தி கொடி மல்லிகைப் பந்தலில் புழக்கடையில் பூப்பறிக்கும்போது கோவில் பிரகாரத்தை நின்று கர்ப்பக்கிரகத்திலிருந்து வரும் தாயார் சந்நிதி முன் கை நீட்டும் அர்ச்சகருக்கு அவள் நிவேதனத் தட்டை நீட்டும்போது-

அவன் திருடனாகிப் பெருந்திருவைப் பார்க்கும்போது, அவள் காட்டும் உதாசீனம்...த்தூ! ஹேர்ட்ஸ் என்ற பாதாள லோகத்திலிருந்து வந்து அக்கில்லீஸ்-புண்டரீகனைப் பார்த்துச் சிரித்தான். பெண்களைப் பற்றிய எந்த நினைவும் இல்லாமல் வாழ முடியும் என்றான் அவன். கண்களில் படரும் தெய்வீகமான சுடருடன் அக்கில்லீஸைப் பார்க்கும் போது அது உண்மைதான்! என்று தோன்றும் புண்டரீகனுக்கு....பாதாளலோகத்தைக் காண அக்கில்லீசுடன் புறப்பட எப்போதும் தயாராய் இருந்தான் புண்டரீகன். தங்கைகளை மணக்கிற கணவர்கள் ஹோர்ட்ஸ் பாதாள லோகத்தில் கூட இல்லை என்றான் அக்கில்லீஸ். எங்களுக்கு தங்கைகளும் பெண்ணே பெண்களே! என்று பதில்

சொல்ல புண்டரீகன் முயன்றும் முடியவில்லை. மீண்டும் பழசுக்குள் புகுந்தான் புண்டரீகன்....

எத்தனையோ முயற்சித்தும் பெருந்திரு நெருங்கவேயில்லை. ராப்பட்டினியாய் படுத்துக் கொள்வது வழக்கமாகி விட்டது. முன்னெல்லாம் இலையிட்டுப் பரிமாறி அண்ணா அண்ணா என்று குழைந்தவளா அறைக்குள்ளே புகுந்து கொள்ளும் இந்தப் பெருந்திரு? கனவு போலிருந்தாலும் அதன் நீ எரித்தது. கவிதை புரியாமற் போனதும் இதனால் தானா? பெருந்திரு கவிதை எழுதுகிறவள். எட்டாவது வயதிலேயே அவள் சொன்ன கவிதையை அவள் அப்பா நாளெல்லாம் பாடிக் கொண்டு பெருந்திருவைத் தூக்கித் தூக்கிக் கொஞ்சினார் அப்பா!

''பூவே புளியம் பூ!
காயே காயாம் பூ!
பழமே பழம் பூ!
தாயேந் தாழம் பூ!
மனமே மனசுப் பூ!''

இதில் என்ன இருந்தது ஆ! ஊ! அற்புதம் என்று கொண்டாட அம்மா பாடுகிற தாலாட்டு மாதிரி வரட்டுத் தனமாய் 'கண்ணே மணியே கற்பூரப் பூவே தாயே தவமே கவியே கனியே' என்று இருந்தது! வேறு என்ன? ஆனால் குட்டி வளர வளர கவிதை எழுதுகிற பழக்கமும் வளர்ந்தது. செதப்பின கவிதை மாதிரி நிறைய நிறைய எழுதினாள் பெருந்திரு! ஒன்று ஞாபகம்!

கையால் தாங்கி
மலரைக் கசக்கவா?
என்னால் அளைந்து
என்னைப் பெருக்கவா
ஊடே புகுந்து
உயிரை
பிரிக்க
வா?!-
என்றும் நோயைத் தந்து
நோயைப் பெருக்கி
நெஞ்சைப் பிரித்து
நெஞ்சைத் தந்து
நீயும் நானும்
இற்று இற்று
இரண்டாகவா? - என்றும் அவள் குழம்பும் வரிகள் பயமுறுத்தும் புண்டரீகனை. காலம் முழுவதும் ஓயாது ஏதேனும் இப்படிப் புரியாத

வரிகளிடையே அவளை மட்டும் எப்படி அவனுக்குப் புரிகிறது என்று அவனுக்கே தெரிவதில்லை. கனவுகளுக்கு அர்த்தம் தெரிந்த வயதில் அவனை விட்டு விட்டு விலகிவிட்ட அவளை இனி அதனைத் தரும்படி கேட்க அவனுக்கும் வெட்கம்தான்.

யாரோ ஒருவன்! வருவதாய் அம்மா சொன்னாள்! ஆம். பெருந்திருவைப் பார்க்க மாப்பிள்ளை வீட்டிலிருந்து வரப் போகிறார்கள். அவளை அள்ளி எடுத்துக் கொண்டு போய் விடுவான். பெருந்திரு பிராட்டியின் சிலை போலிருந்தாள். நடுக்கூடத்தில் ஆளுயர பாவை எரிந்தது. ஊஞ்சல் முழுவதும் பூவால் அலங்கரித்தார்கள். வீடு முழுவதும் பெண்கள். அப்பாவும் நண்பர்களும் குழுமினார்கள். நெய் மணமும் பாயசமும் அமளிப்பட்டது. சாமி உள்ளில் பெருந்திரு விழுந்து வணங்கி எழுந்த அலங்காரம் புண்டரீகனை அயர அடித்தது. அவளது கவிதை நோட்டை வைத்துப் புரட்டிக் கொண்டு நின்றான். ஒன்றுமே புரியவில்லை. பயமாய் இருந்தது. ஸ்டூல் ஒன்றில் காமிரா உள்ளில் அவளை அலங்காரம் செய்து உட்கார்த்தியிருந்தார்கள். யாரும் இல்லை. உள்ளே போய் பாய்ந்து அவளை கட்டித் தழுவிக் கொண்டான். அவள் ச்சீ! ச்சீ! என்று பதறி உதறிப் பதைபதைத்தாள். கனவு போலிருந்தது. கனவாகவே இருந்திருக்கக்கூடாதா?

"நான் என்ன செஞ்சேன்?"- பதறினான் அவன்.

"விடுடா! சீ! விடு! " திமிறி எழும்பி உதைத்து விடுவித்துக் கொள்ள முயன்றாள் பெருந்திரு. இழந்த அவளை விட அவன் தயாராய் இல்லை. இன்னொருவனுக்கு விடத் தயாராய் இல்லை. பயம் பரவும் கால்களால் உதைத்து கால்களாலேயே அவளைப் பின்னிக் கொண்டு தடுமாறி விழுந்தான் புண்டரீகன்.

அந்த அறையின்! தூப மணம் சாமியின் ஊதுவர்த்திச் சுருள் மறைக்கும் படங்கள்! நைவேத்யத் தட்டுகள் பித்தளைப் பளபளப்பில் சூடம் அடங்கி எரிந்து கொண்டிருந்தது. இருவரும் தழுவியிருந்தார்கள். இருவரும் இணைந்திருந்தார்கள். இருவரும் ஒன்றாக முயன்றார்கள். அவ்வளவுதான். பல நாளாய் பட்டினியும் தாகமும் போட்டழைத்த அவதியின் தேகம் இரண்டும் ஒன்றை ஒன்று மருவி மருவி குமிழ் விட்டுக் கொந்தளித்தன. இரண்டே நாழிகை அந்த மௌனத்தில் யாருமற்ற அசலில் ஆழ்ந்து மூழ்கின. இரண்டு தேகங்கள் அவளை அவனிடமிருந்து யாராலும் பிரித்துவிட முடியாது. குனிந்து அவளைப் பார்த்த போது சின்னஞ்சிறு அம்மனாய் புண்டரீகனின் அம்மா அவனடியில் பெருந்திருவாய் கிடந்தாள். அம்மாவா? ஹா! பயங்கரம் ஆம்? இத்தனை நாளா தவித்து வேண்டிய பெருந்திருதான் அம்மாவாய் அவன் அணைப்பில் கசங்கினாள். மல்லிகை சூடியிருந்த பிச்சோடா நெருப்பு மூச்சால் சிவந்து வாடின! அம்மா நீயா? துள்ளி எழுந்தான் புண்டரீகன். நிவேதனத் தட்டுகள் இனிப்பு லட்டுக்களுடன் சரிந்து சிதறின. அடியற்ற மரம் போல் இரண்டு குத்து விளக்குகளும் சாய்ந்து விழுந்தன. எண்ணை கொட்டித் தீப்பற்றியது. சீலைகள் பற்றிக் கொண்டன.

கலகலவெனச் சிரித்தான் அக்கில்லீஸ் மாவீரன்! ட்ராய் நகருக்குப் படை எடுத்துக் சென்றானே ஹெலனை மீட்க...? ஹெலனை மீட்க அம்மாவீரனாலும் முடிந்ததா? வெள்ளிக் கொடி நீண்டு சுருண்டெழ ஆவி போல் எழும்பிப் பால் போல் திரவ ரூபம் காட்டி புண்டரீகனிடம் கேட்டான். உன் பைத்தியம் அன்றைக்கும் சரி., இன்றும் பைசாசமாகித் திரியும் இப்போதும் இருக்கிறதே இன்னும் உன் உயிருக்கு உடலின் மீதுள்ள வெறி தணியாமலா இருக்கும். பாவம்! நான் சொல்வது புரிகிறதா? உன் பெருந்திரு இங்கே தானே இருக்கிறாள்? இன்னும் அவளை நீ விடவில்லையா? கனவு கலைய இன்னுமா காலம்? காலம் இல்லை என்றுமா தெரியாமல் போயிற்று? புண்டரீகனால் ஏதும் சொல்ல வியலவில்லை. பாவம் என்ற உணர்ச்சிதான் இல்லை. அவளுக்குமா அற்றுப் போயிற்று. தன்னைத் தீவிரமாய் ஒதுக்கிய பெருந்திருவை இனி விடுவதற்கில்லை என்று அன்றே கொண்டது காமமா வெறியா? மீண்டும் ஆழ்ந்து பொங்கினான் புண்டரீகன்......

அந்தப் பெண் அவன் தங்கையா? இல்லை! அவளது உடல் தங்கை என்று நினைவு கூறவேயில்லை. அணைப்பில் சிக்கிப் பிதுங்கின பெருந்திரு அணைப்பில் ஆழ்ந்து கிடந்தது மட்டுமில்லை. அவனை புண்டரீகனின் தோள்களின் வழியே பாய்ந்து இடுப்பை ஒல்கி பின்புறமாய் முதுகில் இரு கைகளும் கோர்த்துப் பிணைத்துக் கொண்டிருந்தன. புண்டரீகன் எழ உருவிய போதும் அவளது கைகள் அவனை வரிந்து சுற்றி இறுகியிருந்தன. தாயை தழுவிக் கொண்டிருக்கும் அவதி! அவன் உதற முடிந்தும், அவள் இப்போது முனைந்தது பயங்கரமாய் அவனைத் தாக்கியது. புண்டரீகன் செயலற்றுப்போக சீறி வந்து விரட்டிய பூனை இப்போதில்லை! மலர்கள் கசங்க அந்தப் பெண் இப்போது புண்டரீகனைப் பிணைந்து கலந்தாள். நூற்றாண்டுகளாய் கல்ப கோடிக் காலம் தாகித்த பெண் அவள்! அவள் தாய் இல்லை- தங்கை இல்லை- உடன் பிறந்தவள் இல்லை - பெண்ணே இல்லை அவள்.

ஆண்டாண்டு காலமாய் தவம் இயற்றிச் சுதந்திரத்தை இழந்து கொட்டடியில் நசுக்கப்பட்ட பெட்டை அவள்! மிருகம் புண்டரீகன் அந்தச் சாகர சங்கமப் பிறையில் விழுந்து ஆழ்ந்தே போனாள். உடல்கள் தம்மை மறந்து உயிர்கள் தம்மை இழந்து பொறி சிதறிக் கலங்கிப்போன நேரம் அது. ரத்தம் உறைந்து உடலின் ரசாயனங்கள் குழைந்து மிருகங்கள் ஒன்றை ஒன்று கீறி கதுப்புகளைக் கடித்து துடைகளில் கிள்ளி ரத்தத்தைப் சுவைத்து இருண்டு போன கதி அது!

ஹெலன் நிமிர்ந்து நின்று அழைத்தாள்! ஆறாயிரம் ஆண்டுகளாய் வாழும் ஹெலன். அவன் மருண்டு திரும்பி ஆழ்ந்தான் புண்டரீகன். பேரழகி ஹெலன்! அந்தப் பெண்ணுக்காய் டராய் நகரில் போரிட்டு மாண்ட கிரேக்கர்கள் பத்து லக்ஷம் பேர்! இன்று ஆறு நூற்றாண்டுகளுக்குப் பின் மண்மேடிட்டுக் கிடக்கும் துருக்கியின் புராதன கிராமத்தைச் சுற்றி வருபவைகளில் ஹெலையும் ஒன்று! ஹெலெ பழங் கதைகளிலே ஹெலன்! அவளுக்காக ஈஜியன் கடல்களிலே கவிழ்ந்த கிரேக்கக் கப்பல்கள் எத்தனை? புண்டரீகனைப் பார்த்து சிரித்தது

ஹெலை! ஹெலையின் உடலை எண்ணிப் பார்க்க முடிந்தது புண்டரீகனால்! தங்க நிறத்தின் முடிச் சுருள்கள் தோள்களைத் தழுவ தந்தத்தின் உடல் வளப்பம்! செவ்விய மேனியின் பணைத்த முலைகள் கூசிடப்பட்டு சுற்றி மறைத்த இடையும் யானையின் துதிக்கை போன்ற துடைகளும் வாழையும் உவமைக்குதவா உயிர் பொருள்களும் ஆராதிக்க இயலாப் பேரழகு. சொல்லுக் கடங்கா பேரின்பம்.

இத்தனையும் ஹெலன் அல்ல! பெருந்திரு திடுக்கிடாமல் சிரித்தாள் ஹெலனா! புண்டரீகம் ஆவி புரள எழுந்து நின்றது. இத்தனை இன்பத்தை தேக்கிய ஹெலனை அன்று ட்ராய் நகரம் கோட்டை மண்ணில் சாய்ந்ததும் கிரேக்கர்கள் மறுபடியும் மூன்று கணவர்களின் படுக்கையையும் கனவாக்கிய ஹெலனை மீண்டும் முதற்கணவனின் படுக்கைக்கே இழுத்துப் போன கோரம் உலகில் வேறு எங்கும் அண்டா? ஹெலனும் சீதையும் வேறு வேறல்ல. திரௌபதியும் மண்டோதரியும் பெருந்திருவும் ஒன்றல்ல! வேறு வேறு என்றாலும் ஒன்றிற்கு ஒன்றா? ஒன்றே ஒன்றா!

ஹெலை கண் சிமிட்டிச் சொன்னாள் ''பெண் என்றும் ஆண் என்றும் பிரித்ததே இந்த ஓயாத சுழலுக்குத்தான். அமைதி வேண்டுகிறாயா பிசாசே! பூதமே! புண்டரீகா உனக்கு அமைதி வேண்டுமா! சீ! அமைதி சமாதானம். அது ஆன்மாவின் இழிநிலை! தேடியதைத் தேடு. ஓடியதைப் பற்று. பற்றியதை விடாதே. அடையும் வரை ஓடு. ஓடியதை நிறுத்தாதே. நிறுத்தினால்...'' ஹெலை கலகலவென்று சிரித்துக் கரைந்தது.

அந்த பூனை உள்ளுக்குள். தனியே நின்றான் புண்டரீகன்!

நிலைகுலைந்து நின்றாள் பெருந்திரு!

தங்கை!

அல்ல!

அவள் தாய்!

புண்டரீகன் கண் கூசியது! தாயானால்தான் என்ன?

மிருக பிராயத்து உணர்வுகள்! கனவுகள். அது சரி பெண்ணை நீக்கிய தாய் யார்? மீண்டும் அக்கிலீஸின் சிரிப்பு கேட்டது. வெள்ளிக் கொடி ஒன்று இருளில் நீந்தி வந்து புகையாய் வெண்மையாய் இருளில் நிறைந்தது. இன்னும் உன் தூக்கம் கலைய வில்லையா? புண்டரீகம் விழித்தது. மரத்தின் உச்சியில் நின்றது அது. வேதாளம்போல் சிரித்தது. ஆனால் தலை கீழாய்த் தொங்கவில்லை. எங்கும் இருள் கப்பியிருந்தது.

பெருந்திருவை இழுத்திறுக்கி அணைத்த அந்த இரவிலும் இருள் கப்பித்தான் கவிந்திருந்தது. அந்த பூஜை உள்ளிலேயிருந்து அவளை வெளியே விடவில்லை என்றைக்குமாய்! கதவை உடைத்துதான் திறந்தார்கள். அம்மாவும் அப்பாவும் அலறினார்கள். உள்ளே இருவரும் தழுவிக்கொண்டு... புண்டரீகனின் கை விரல்கள் பெருந்திருவின் கழுத்துப் பால் வெளியில் நகங்களுடன் நுழைந்து பட்டுப்புடவைப் பொன் நிறத்தின் பரப்பில் ரத்தம்

ஊறிப் பரவி நனைந்திருந்தது. பெருந்திரு தன் வெள்ளை விழிகளிலும் ரத்தம் வழிந்து நனைக்க... அம்மாவின் அலறல் தனிப் பிலாக்கணாய் எழும்பிய போது மேலே வான விளிம்பில் இரண்டு வெள்ளிக் கம்பிகள் நீண்டு ஜவ்வு போல் நீண்டு முறுக்கி ஒன்றினை ஒன்று தழுவி விளையாடிப் புணர்ந்து கலந்து ஒற்றை ஜரிகை இழையாய் அந்த உயிர்க் கயிறு தொடர்பற்று அறுந்து சுருண்டு மேலே மேலே சுழன்று நூல்கண்டு போல் சுருண்டு புகை படர வெள்ளை மேகமாய் படர்ந்து இறுகியது.

புண்டரீகன் அன்று அவளை இணைக்கத் தழுவிய போது பெருந்திருவும் அவனுடன் ஒன்றிப்போன விரசம் அவர்கள் இருவரையும் பற்றி எரித்தது உருகி அழித்தது. இன்றும் அவனுக்கு - அதுவான பின்பும் உருவம் உடைத்துச் சிதறிக் கலந்த பின்பும் புதிர்தான்!

கலகலவென்ற நகைக் கூட்டம் மழையாய்ப் பொழிந்தது.

எதிரே பெருந்திரு! இறந்த பின்பும் அவள் அவனுடன்தான் இருக்கிறாள்! ஆனால் புண்டரீகம் இன்னும் அலைகிறது! காற்றூதிச் சலசலக்கும் மரங்களிடையே கானகத்தே வளர்ந்து கிடக்கும் ஈத்தம் புதர்களின் கூரிய இலைகளின் ஊடே ஆயிரமாயிரம் அலைகள் வீசும் சிற்றலைகளின் நீர்ச்சுழிகளின் இடையிடையே புண்டரீகம் அலைந்து கொண்டேயிருக்கிறது.

காற்றின் மீது மீண்டும் வெள்ளிக் கொடி அசைவதை புண்டரீகம் ஆழ்ந்து பார்த்தது. புகை பரவி விரிந்தது. பாலாவி அருவியாய் வழிந்தது.

மைத்ரேயி சிரித்து விரிந்தாள். கூடவே காலவ மகரிஷியும் பாரத்திலிருந்து மீண்டும் சிரித்தார்கள். ''சுவாமி! உடல் போயிற்று. உயிர் போகாதா?'' புண்டரீகன் கேட்டான்! காலவ மகரிஷி வெள்ளிக்கம்பி உரசியது போல் சிரித்தார். வேத கால மைத்ரேயி அனுபவப்பட்டவள்! இதோ அவளை அழைத்ததும் நீ தானே? அவளிடமே கேளேன்.

''உடல் வினை உயிர் விளைவு. மகனே உனக்கு எது வேண்டும்?''

''புரியவில்லை தாயே.'' உடலை விட்ட உயிர் உடலை மறக்காம உயிரை விட்டாலும் உயிருக்கு உடல் மறக்க மைத்ரேயி சொன்னாள். ''மகனே பெருவெளிக்கு வந்தும் இன்னும் பல்லாண்டுக் காலமாகும் உன் வினை தீர! சொன்னால் புரியாது. ஆயின் பழமை உனக்கு நஞ்சாய் உள்ளே அடைத்து நிற்கிறது.''

வானளாவிய ஆலமரம் கொடி வீசி நீண்டுயர்ந்த கிளைகளை வானத்தே ஊன்றியிருந்த கிளைகளின் நுனிகளில் மேலும் கீழுமாய் ஊசலாடியது புண்டரீகம்.

வினைகளின் இருள் கப்பிச் சுழன்று சுற்றும் பேயாய் பூதமாய் வழக்கம்போல் நிறைவேறாத ஆசைகளின் கோரக்கூச்சலாய் காட்டின் நடுவே இருண்ட சுனைகளின் ஆழத்தில் தன் சுனை தேடிப் புண்டரீகம் படர்ந்து விரிந்தது.

* அலகைச் சலங்கைச் சிதறச் சிரித்தது.

பாதை ஓரத்தே ஒரு கட்டை வண்டி ட்டடக்.., ட்டடக்கென அசைந்து போய்க் கொண்டிருந்தது. இருபுறமும் வயல்கள். வயல்களிடையே தோப்புகள் துறவுகள் வாய்க்கால் வழிகள் எங்கும் நீர்நிலைகள்.

வண்டியில் ஒருவன் ஆண் மற்றொருத்தி பெண். வண்டி நகர்கிறது மண்ணை அணைத்தபடி.

ரகஸ்யமாய்க் கனவு போல் சிரித்தது காற்று!

"என்ன? நீ என்ன சொன்னே?" என்றான் ஆண்மகன்

"ஒண்ணும் சொல்லல்லியே! நீதான் சொன்னெ என்னமோ!"

களுக்கிட்டுச் சிரித்தாள் பெண்.

"என்ன சொன்னே?" என்றான் வியப்புடன்

"என்னமோ... வந்து... ரகஸியமா காத்து சிரிக்கிதுன்னு...

"ஆமா காத்து சிரிக்காமெ என்ன செய்யுமாம்? உன்னெ மாதிரி ரகஸ்யமா..." அங்கே பேச்சே இல்லை. புண்டரீகம் மேலே மேலே மேகத்தில் பாய்ந்தது...

கீழே கீழே கீழே கவிதை புரிந்தது அதற்கும்!

காற்று ரகஸ்யமாய் கனவு போலத்தான் சிரித்தது. அதற்குள் புண்டரீகம் அதில் கலந்து கரைந்து லேசாகிப் போயிற்று...

(திடல் ஜனவரி 99)



---

* அலகை-அமானுஷச் சக்தி கொண்ட ஆவி